# கம்பன் மணி மலர்

ஆங்கிரஸ 1993






கம்பன் புகழ்பாடிக்
கன்னித் தமிழ் வளர்ப்போம்

# கம்பன் மணி மலர்
## 1993



---

ஆங்கிரஸ பங்குனி 21உ முதல் 24உ வரை

1993 ஏப்ரல் 3உ முதல் 6உ வரை நிகழ்ந்த

**55 ஆவது கம்பன் திருநாள் வெளியீடு**

---

**கம்பன் கழகம்**

கம்பன் மணி மண்டபம், காரைக்குடி-623 002

# முன்னுரை

கம்பன் ஓர் உலக மகாகவி. கவிச் சக்கரவர்த்தி. காப்பிய வானில் கதிரவனாய் நின்று ஒளிர்பவன். இவன் கல்லாத கலையும், வேதக்கடலும் உலகில் இல்லை எனலாம். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன் நம் தந்தை பிரான் கம்பன்.

முத்தரையரிடமிருந்து தஞ்சைப்பகுதியை மீட்டுச் சோழப் பேரரசை நிறுவிய விஜயாலயன் காலத்தில் மிளிர்ந்தவன் கம்பன். விஜயாலயன் மகன், கோதண்டராமன் எனப் பெயர் சூடிக் கொண்ட ஆதித்தன் (கி. பி. 871-907) காலத்தில், அவனால் பெரிதும் மதிக்கப் பெற்ற வனாய் விளங்கியவன் கவிச்சக்கரவர்த்தி.

கம்பனை, பெற்ற தந்தையினும் பேணிக் காத்து நின்றவர் சடையப்ப வள்ளல். இன்று கதிராமங்கலம் என விளங்கும் வெண்ணெய் நல்லூர்தான் சடையப்பர் வாழ்ந்த வள நகர். கம்பனின் பல்துறைப் புலமையும், எல்லையிலாக் கவிதா சன்னதமும் கற்றோரை யெல்லாம் ஈர்த்து நின்றன. முடியுடைத் தார் வேந்தர்களும், ரசிக பெருமக்களும், கம்பனைப் பெரிதும் மதித்துப் போற்றுவாராயினர்.

கம்பனின் பேராற்றற் பெரும்புலமைக்கு என்றும் கட்டியங் கூறிக்கொண்டு விளங்குவது அவன் அருளிய இராமாவதாரம் என்னும் இராமகாதை! தமிழ் மொழியின் வளத்திற்கும், தமிழர் தலை நிமிர்வுக்கும், ஒப்பற்ற உதவியாய் நின்று நிலவிவது கம்பராமாயணம். தமிழ் மொழியின் தனிப் பெரும் காப்பியத்தை, எம்மப்பன் கம்பன், சடையன் பதியாம் வெண்ணெய்நல்லூரில் அரங்கேற்றினான். மன்னர்களும். மறையோர்களும், ரசிகப் பெரு மக்களும், அறம் பேணும் பொதுமக்களுமாக நிறைந்திருந்த கண்ணியம் நிறைந்த அவைக் களத்திலே அரங்கேற்றம் நடைபெற்றது. பவித்திரமான அக்காப்பியம் அரங்கேறிய புனித விழா ஒரு பெரும் திருவிழாவாக, ''நாவலோ, நாவல்!'' என்று நடந்திருக்க வேண்டும்.

சகாப்தம் 807; கலியாண்டு 3986க்குச் சரியான விசுவாவசு-பங்குனி 4ஆந் தேதி (கி. பி: 889 பெப்ருவரி - 22) புதன்கிழமை அஸ்த நட்சத்திரமே இராமாவதாரம் அரங் கேறிய பெருநாள். அன்றுதான் நம்முடையவன் கம்பனை, ''கவிச்சக்கரவர்த்தி'' என்று அறிவுடையுலகம் மனமாரப் பாராட்டி விருதளித்து மகிழ்ந்தது

கம்பன் பிறந்த நாளை நாமறிய எவ்வகைச் சான்றுகளும் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் ''கவிச்சக்கரவர்த்தி'' பிறந்த நாளை நாம் நன்கறிவோம். பங்குனி - அத்த நாளில் தானே ''கவிச்சக்கரவர்த்தி'' பிறந்தான்! எனவே இராமாவதாரம் அரங்கேறியதும் ''கவிச் சக்கரவர்த்தி'' என்ற விருதுப் பெயரைக் கம்பன் ஏற்றருளியதுமான அந்தப் பங்குனி அத்த நாளையே கம்பன் திருநாளாக - ஜன்ம நட்சத்திரமாக - ஏற்று, விழா எடுத்து வருகிறோம்.

மகம், பூரம், உத்தரம் ஆகிய முதல் மூன்று நாள்களில் காரைக்குடியில் உள்ள கம்பன் மணி மண்டபத்திலும் பங்குனி அத்த நாளில் நாட்டரசன் கோட்டையில் கவிச்சக்கரவர்த்தி சமாதி கொண்டு எழுந்தருளி அருள் சுரக்கும் கம்பன் பள்ளி படைத் திருக்கோயிலிலும், தூய இலக்கியப் பெருவிழாவாகக் கொண்டாடி மகிழ்கிறது கம்பன் கழகம்.

இவ்விழா எவ்விதமான சாதி, சமய, மொழி, கட்சி, பால் வேறுபாடின்றி யாவரும் கலந்து மகிழும் அருமையுடையதாகும். புலவர்களும், கலைஞர்களும், கவிஞர்களும், திறனாய் வாளர்களும், ரசிகர்களுமாக ஆயிரக்கணக்கானவர்கள் ஆண்டுதோறும் வந்து கலந்து கம்பன் புகழ் பாடியும், கம்பன் புகழ் பருகியும பெருமை செய்கின்றனர்.

கம்பன் திருநாட் செலவு ஆண்டுக்காண்டு கூடிக்கொண்டே வருகிறது. ஐம்பத்து மூன்று ஆண்டுகட்கு முன் முன்னூற்றைம்பது ரூபாய் அளவில் தொடங்கிய கம்பன் திரு நாளின் செலவு ஆண்டு தோறும் வளர்ந்து எத்துணைச சிக்கனமாக நடத்தினும், ரூபாய் முப்பதினாயிரத்துக்கும் மேல் உயர்ந்து விட்டது. நிலையறியும் உடனுறை நல்லன்பர்கள் முன் வந்து உவந்தளிக்கும் நன்கொடை, செயலின் ஒரு சிறு பகுதியையே ஈடு செய்கிறது.

இந்நிலையில் கம்பன் பற்றிய கட்டுரைகளைத் தொகுத்துப் பயனுள்ள மலர் வெளி யிடுவதென்றும், அதில் விளம்பரங்கள் வெளியிடுவதென்றும், முடிவு செய்யப்பெற்றது. அதற்குக் கம்பன் பால் அன்பும், திரு. கம்பன அடிப்பொடியின் பால் பரிவும் உள்ள அன்பர்கள் பலர் விளம்பரங்கள் தந்துதவி, இப்புனிதப் பணிக்கு ஆக்கம் தர முன் வந்துள்ளனர்.

இவர்கட்கெல்லாம் எளியோம் என்ன கைம்மாறு இயற்ற வல்லோம்? எம்மப்பன் கம்பனும் அவன் பாடிப் பரவிடும் முழுமுதற் பரம்பொருளும், இவ் அறவோர்கட்கும் இவர் களின் முயற்சிகட்கும், தொழில்துறை வாணிபங்கட்கும் எல்லா நலன்களையும், வளங்களை யும் அருளிக் காத்தருள வேண்டுமென்று மனமொழி மெய்களால் வணங்கி வாழ்த்துகிறோம்.

எல்லா வகையாலும் முன்னரும், பின்னரும் கம்பன் திருநாளுக்கும், கம்பன் திருப்பணி கட்கும் உதவிய - உதவி வருகிற-அறவுள்ளம் படைத்த பெரியோர்கள், அன்பர்கள் யாவர்க்கும் என்றும் மறவா நன்றியுடன் பணிவார்ந்த வணக்கம் செலுத்தி மகிழ்கிறோம்.

இம்மலரை மிக்க சிரத்தையுடன் அச்சிட்டு உதவிய வேன்கார்டு அச்சகத்தார்க்கு எங்கள் நன்றி உரியதாகும்.

கம்பன் மணி மண்டபம்
காரைக்குடி-623 002
1-4-'93

அன்பும் பணிவுமுள்ள
கம்பன் கழகத்தார்



"முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்
முர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்
பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்
பேர்த்துமவன் சேவடிக்கே பிச்சன் ஆனான்
அன்னையுடன் அத்தனுமே கம்ப னென்றான்
அவன் பெயராய்த் தன் பெயரை ஆக்கிக் கொண்டான்
தன்னைமறந் திட்டான்தன் நாமம் கெட்டான்
தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன் தாளே."

— கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம்



''நின்னாவார் பிறரன்றி நீயே ஆனாய்;
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்''

"Who can say more than this rich praise that
you alone are you?"

त्वमेव माता च पिता त्वमेव,
त्वमेव बन्धुश्च सखा त्वमेव,
त्वमेव विद्या द्रविणं त्वमेव,
त्वमेव सर्व मम देव देव ॥

''நின்னை வணங்கி, நீவகுத்த நெறியில் நிற்கும் அதுஅல்லால்
என்னை அடியோம் செயற்பால?''

# நெடுந்தடங் கிடந்த கண்ணாள்

வாழியூர் வே. இராசவேலன், எம்.ஏ., எம்.எட்.

நீலமாலை ஒரே காட்சியில் வரக் கூடிய ஒருபாத்திரம். ஆனால் முக்கியமான பாத்திரம். சீதையின் உடலில் உயிர் இருப்பதா? பிரிவதா? என்ற நிலை இருந்தபோது அந்த உடலில் உயிரை நிறுத்தி வைத்த பெருமை நீல மாலைக்கு உரியதாகும். பெண்மையை வாழ வைத்த பெருமை இவளுக்கு உண்டு. நீல மாலை அப்படி என்ன செய்தாள்? கம்பன் இவளை அரங்கத்தில் எவ்வாறு நடமாடவிட்டி ருக்கின்றான் என்பதனைக் காண்போம்.

இராமன் தன் இளவலுடன் முனிவனைப் பின் தொடர்கின்றான் மூவரும் மிதிலையை அடைகின்றனர். மிதிலை தெருக்களிலே பல வகைக் காட்சிகளைக் கண்டு செல்கின்றனர். அரண்மனை அருகே வருகின்றனர். கன்னி மாடத்தில், 'பொன்னின் சோதி, போதினின் நாற்றம், பொலிவே போல் தென் உண் தேனின் தீம்சுவை, செஞ்சொற்கவி இன்ப' மான சீதை இருக்கின்றாள். சீதையின் கண் களும் இராமனின் கண்களும் சந்திக்கின்றன. 'பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தலால் இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்'.

இராமன் சீதையின் பார்வையிலிருந்து மறைகின்றான். அவன் சென்றதும், மதம் பிடித்த யானை, தன் காதில் மாட்டியிருந்த தன்னை அடக்குகின்ற அங்குசத்தை நிமிரச் செய்துவிட்டுத் தான் விரும்பின வழியே செல்லு தல் போல், தனக்குரிய தலைவனான இராமன் மறைந்தவுடன் சீதையின் மனம் தன்னை யடக்கி வைக்கும் நிறையென்னுங் குணத்தை ஒழித்துத் தான் விரும்பிய வழியே சென்றது.

சீதை காமநோயினால் துடித்தாள். தோழியர் அவளை மலர்ப்படுக்கை மீது படுக்க வைத்தனர். சீதையின் காமவெப்பத்தினால் மலர்ப்படுக்கை தீய்ந்தது. அவள் மீது பூசப் பட்ட சந்தனம் காமத் தீயினால் உலர்ந்து உதிர்ந்தது. இராமனை எண்ணி, 'இந்திர நீலம் ஒத்து இருண்ட குஞ்சியும், சந்திரவதன மும், தாழ்ந்தகைகளும், சுந்தரமணிவரைத் தோளுமே, அல; முந்தி என் உயிரை, அம் முறுவல் உண்டதே' என்றும், ''பிறந்துடை நலம் நின்ற பிணித்த எந்திரம், கறங்குபுதிரி யும் என் கன்னிமாமதில் எறிந்த அக்குமரனை இன்னும் கண்ணிற்கண்டு, அறிந்து, உயிர் இழக்கவும் ஆகுமே கொலாம்?'' என்றெல் லாம் உருகினாள், புலம்பினாள்.

மூவரும் ஜனகன் அவைக்குச் செல்கின்ற னர். சதானந்தர் வில்லின் வரலாற்றைக் கூறு கின்றார். ஜனகன், 'யார் இந்த வில்லை வளைத்து நாண் ஏற்றுகிறார்களோ அவர் கட்கே சீதை திருமணம் செய்து கொடுக்கப் பெறுவாள்' என்று தெரிவிக்கின்றார். 'அறிவ னும் தன் புனைந்த சடைமுடி துளக்கி போர் ஏற்றின் முகம் பார்த்தான்; வளைந்தனைய திருமேனி வள்ளலும், அம்மாதவத்தோன் நினைந்த எலாம் நினைந்து, அந்த நெடுஞ் சிலையை நோக்கினான்.'

நோக்கிய அண்ணல், தோகையர் பலவாறு சொல்லிடவும், நல்லோர் ஒகை விளம்பிட உம் பர் உவப்ப, மாக மடங்கலும், மால் விடை யும், பொன் நாதமும், நாதமும் நாண நடந் தான்.'

நடந்த இராமன், 'தேட அருமாமணி சீதை எனும் பொன் சூடக வால் வளை, சூட்டிட நீட்டும் ஏடு அவிழ் மாலை இது' என்ன எடுத்தான். அவையில் இருந்தவர்கள் கண் மூடித் திறக்கு முன், வில்லை வளைத் தான். ஆனால் ஒருவரும் அவன் வளைத் ததைக் காணமுடியவில்லை;' எடுத்தது கண்ட னர், இற்றதைக் கேட்டனர்.'

வில் முறிந்த பேரோசை மூவுலகத்திற்கும் கேட்டபோது சீதையின் செவிகளில் அவ் வோசை விழவில்லை! ஏன்? அவள்தான் காம வயப்பட்டுத் தன்னை மறந்திருக்கின்றாளே! 'தன் நாமம் கெட்டிருந்தாள், தலைவன் தாளில் தலைப்பட்டிருந்தாள். இராமனை

எண்ணிப் பலவாறு பிதற்றிக் கொண்டிருந் தாள்.

சனகன் வேள்விச் சாலையில் இராமன் சிவதனுசை எடுத்ததையும், ஒடித்ததையும் காண்கின்றாள் ஒருத்தி. யார் அவள்? அவள் தான் நீலமாலை! சீதையின் தோழி! அவளைக் கம்பன் அழகாக அறிமுகப்படுத்துகின்றான்.

நீலமாலை கருங்குவளை மலர் போன்ற கண்களை உடையவளாம். அவள் கழுத்தில் உள்ள ஆரங்களும், காதினில் உள்ள காதணி களும் வானவில்லைப் போன்று பல நிற வொளிகளை வீசுகின்றனவாம். அத்தகைய வள் மலரணிந்த கூந்தலும், ஆடையும் அவிழ்ந்து சரிய துவண்ட மின்னல் போல விரைவாக சீதை இருக்குமிடம் வருகின்றாள். இதனைக் கம்பன்,

வடங்களும் குழைகளும் வான வில்லிட
தொடர்ந்த பூங்கலைகளும் குழலும் சோர்தர
நுடங்கிய மின்னென நொய்தின் எய்தினாள்
நெடுந் தடங் கிடந்த கண் நீலமாலையே

[721]

சீதையின் இருப்பிடம் வந்த நீலமாலை சீதையை வணங்கவில்லை. ஆரவாரம் செய் கின்றாள். எல்லையற்ற மகிழ்ச்சியில் திளைக் கின்றாள், ஆடிப்பாடுகின்றாள். இதனைக் கண்ட சீதை, 'சிந்தையுள் மகிழ்ச்சியும், புகுந்த செய்தியும் சுந்தரி சொல்' என்றாள்.

மகிழ்ச்சியை அனுபவிப்பதில் ஒவ்வொருவ ரும் ஒவ்வொருவிதம். சிலர் எதிரில் இருப்ப வர்களைக் கட்டிப் பிடித்துக் கொள்வார்கள். குதிப்பார் சிலர், குடிப்பார் சிலர், ஒன்றாகச் சேர்ந்து உண்பார் சிலர், எதிரில் இருப்போரை (அன்புடன்) அடிப்பார் சிலர். ஆனால் கம்ப னுக்கு மகிழ்ச்சி வந்துவிட்டால் இறைவன் இருப்பதையே மறந்து விடுவான். செய்ய வேண்டியதை முறைப்படி செய்ய மாட்டான்.

இலங்கை சென்று, சீதையைக் கண்டு வந்த அனுமான் இராமனிடம் வருகின்றான். இல்லாளைப் பிரிந்திட்ட இராமன் ஏக்கமுடன் அஞ்சனை மகன் கொண்டு வரும் செய்திக்காக ர்வமுடன் காத்துக் கொண்டிருக்கின்றான்.

சொல்லின் செல்வனான அனுமன் வந்த தும் இராமனிடம் செய்தியைக் கூறவில்லை. சீதை இருக்கும் திசை நோக்கி வணங்கினான். இதனைக் கம்பன்,

எய்தினன் அனுமனும்; எய்தி, ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன்; முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன், கையினன்
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி
வாழ்த்தினான்

[6028]

சீதையின் வினாவிற்கு விடையினை விரை வாகச் சொல்லவில்லை. தயரதனைப் பற்றிக் கூறுகின்றான். எப்படிப்பட்ட தயரதன்? ''யானை, தேர் குதிரை இவற்றினை மிகுதி யாக வைத்துள்ளவன்; கல்வியில் சிறந்தவன்; இருப்பவர் இல்லாதவர் எனச் செல்வத்தை வாரித் தருகின்ற நீண்ட கைகளை உடைய வன்; உலகத்தையே வென்று தனிச் செங் கோல் செலுத்துபவன்'' என்கிறான்.

சானகி இச்செய்தியைக் கேட்டு விழிக்கின் றாள். அவள் நிலையைக் கண்டு மேலும் கூறு கின்றான், ''அத்தகைய தயரதனுடைய மகன் இராமன்! அவன் எப்படிப்பட்டவன் தெரியுமா? மலரம்புகளைக் கொண்டு காம மயக்கத்தை உண்டாக்குகின்ற மன்மதனைக் காட்டிலும் வடிவழகுடையவன்'' என்று தன் தொடக்க வுரையை நிகழ்த்துகின்றான். இதன் மூலம் சீதையின் ஆவலை அதிகப்படுத்துகின்றான்.

இராமனைப் பற்றி விளக்கம் தருகின் றான். 'இராமன் மராமரம் என வளர்ந்த தோளினன்; பாம்பின் மீது பள்ளி கொள்ளும் திருமால்தான் அவதரித்தானோ என்று கண்ட வர் ஐயுறும் வல்லமை படைத்தவன். அத்த கைய இராமன் தன் தம்பியுடனும், முனிவ னுடனும் நம் நகரை வந்து சேர்ந்தான்' என்று கூறுகின்றான். இதுவா சீதைக்கு முக்கியம்?

சீதையை ஒரு பார்வை பார்த்துவிட்டு நீல மாலை மேலும் சொல்கின்றான், ''வலயங்கள

ணித்த தோள்களை உடைய இராமன், வில்லை வளைத்து வெகு எளிதாக நாண் ஏற்றினான். ஒரு நொடிப் பொழுதில் அவ்வில்லின் ஒரு பக்கத்து முனையைக் காலால் மிதித்துக் கொண்டு முன் பழகின பொறி (இயந்திரம்) இது என்று கண்டவர் கருதும்படி அவ்வீரன் தன் தோள் வலிமையால் வளைத்திட்டான். அவ்வளவில் சபையே நடுங்கும்படி வில் முறிந்து விழ்ந்தது.''

மாத்திரை அளவில்தான் மடுத்து முன்பயில்
'சூத்திரம் இது' என தோளின் வாங்கினான்
ஏத்தினர் இமையவர்; இழிந்த, பூமழை
வேத்தவை நடுக்குற முறிந்து விழ்ந்ததே
[726]

என்று முடிக்கின்றான்.

'கோமுனியுடன் வந்த மேகம் போன்றவன்' என்று கூறிய பிறகு, சீதை தன் காதலுக்கு இடனாகிய தான் முன்பு பார்த்த அந்த ஆடவனாக இருப்பானோ? என்ற ஐயம் சிறிது நீங்கப் பெற்றாள். ''அதனால் அவளுடைய மேகலை இற்றுப்போகும்படி இடை பருத்தது'' என்பான் கம்பன்.

இதுவரை துயரத்தில் இருந்த சீதை நீலமாலை சொன்ன செய்தியால் மகிழ்ச்சியில் திளைத்தாள். இதனைப் பார்த்த மற்றவர், 'இவளுக்கு இடை இல்லவே இல்லை' என்று நினைத்திருந்தவர்கள் உடல் பூரித்து இப்போது இடை தோன்றுவதால் ''உண்டு உண்டு'' என்ற முடிவுக்கு வந்தனர். சீதை தனக்குள் 'சொல்லிய குறிப்பின் அத்தோன்றலே அவன்; அல்லனேல் இறப்பேன்' என்று அகத்துள் உன்னினாள்.

இந்த ஐயம் முழுவதும் எப்பொழுது நீங்கியது? சீதையை அலங்கரித்து மன்னர் இருந்த மண்டபத்திற்கு அழைத்து வருகின்றனர். முறைப்படி சீதை வணங்குதற்கு உரியவரை வணங்கியபின் தந்தையின் அருகில் இருக்கின்றாள். அப்பொழுது இராமனைக் கடைக் கண்ணால் கண்டு, 'அவனே இவன்!' எனத் தெளிந்து மகிழ்கின்றாள். அவள் இராமனைப் பார்த்த முறையினைக் கம்பன், 'கைவளை திருத்துபு, கடைக்கணின் உணர்ந்தாள்' என்பான்.

எய்யவில் வளைத்தும் இறுத்தும் உரைத்தும்
மெய்விளைவு இடத்து, முதல் ஐயம்
விடலுற்றாள்
ஐயனை, அகத்து வடிவேஅல, புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணின்
உணர்ந்தாள்
[1153]

இவ்வாறு பார்த்து ''கருத்தின் உறை கள்வன் எனல் ஆனான் வணங்கு வில் இறுத்தவன்'' எனத் துயர் மறந்தாள்.

இத்தகைய ஒரு நிலையை உருவாக்கியவள் நீலமாலைதானே!

